REGD.No. M. 6311 ★ தனி இதழ் 1 அணா ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 55630

# நம் நாடு

தி.மு.க.தின இதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ✶ The official organ of the D.P.F.

மலர் 3] சென்னை: கார்த்திகை 9உ வெள்ளி (25—11—55) ★ ★ வெளியூர்: கார்த்திகை 10உ சனி (26—11—55) [இதழ் 140

## தாமரை இலை தண்ணீர்போல்!

பெரெய்லி, நவ. 23—

பஞ்சாப் மாநில சட்டசபை உறுப்பினர் ஒருவர், சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சிச் செயலாளர் குருஷ்சேவிடம் 'அவர் ஒரு கம்யூனிஸ்டுக் கட்சி உறுப்பினர்' என்று அறிமுகப்படுத்தப்பட்டபோது, குருஷ்சேவ், 'உங்களுடைய அரசியல் கருத்து பற்றி எனக்கு அக்கரையில்லை; ஏனெனில் அது உங்களுடைய உள்நாட்டு விவகாரம்; தாங்கள் ஒரு இந்தியர்; அது மட்டுமே எனக்குத் தேவையானது' என்று கூறியிருக்கிறார்.

# 'அடிமை தட்சிணப் பிரதேசத்தை எவரும் விரும்பார்'

## 'தமிழ் நாடு எனப் பெயரிடுவதற்குக் காமராசர் தயங்குவது ஏன்?'

## 'தேவிகுளம், பீர்மேடு பற்றி கம்யூனிஸ்டு கருத்து வெண்டைக்காயாக இருக்கிறது'

### சென்னை சட்டசபையில் ஏ. கோவிந்தசாமி எம்.எல்.ஏ. கருத்துரை

"தென்னகம் இன்று மொழி அடிப்படையில் பிரிக்கப்பட்டிருக்கிறது; ஆந்திரர் வாழும் நாடு ஆந்திரா என்றும், மலையாளிகள் வாழும் நாடு கேரளம் என்றும், கன்னடர்கள் வாழும் நாடு கர்நாடகம் என்றும் அழைக்கப்படும்போது, தமிழர்கள் வாழும் நாட்டை 'தமிழகம்' என்று ஏன் அழைக்கக்கூடாது? 'தமிழ் நாடு' என்ற பெயர் இந்த மாநிலத்திற்குத் தரப்பட்டே ஆகவேண்டும். 'சென்னை மாநிலம் என்ற பெயரே இருந்தால் ஒன்றும் குடி முழுகிப்போய் விடாது' என்று முதலமைச்சர் காமராசர் கூறுவது சரியல்ல; நமக்குப் பக்கத்திலுள்ள நாட்டவர்கள் தங்கள் தங்கள் மாநிலத்திற்கு மொழி அடிப்படையில் பெயர் வைத்துக் கொள்ளும்போது, சென்னை மாநிலத்திற்கு மட்டும் ஏன் 'தமிழ் நாடு' என்று பெயர் வைக்கத் தயக்கம் காட்டப்படுகிறதோ தெரியவில்லை. 'பச்சைத் தமிழர்', தனித் தமிழகத்திற்கு 'தமிழ் நாடு' என்ற பெயர் வைக்க ஏன் தயங்க வேண்டும்?

"மொழிவாரியாக மாநிலங்களைப் பிரிப்பதற்குப் பதில் 'தட்சிண மாநிலம்' ஒன்று ஏற்படுத்தலாம்—என்று குட்டிகிருஷ்ணன் நாயர் போன்றவர்கள் கூறுகின்றனர். அவர்கள் அமைக்க விரும்புகிற தட்சிணப் பிரதேசம் வேறு: நாங்கள் கேட்கும் திராவிட நாடு வேறு; சிதம்பரம் செட்டியார் போன்றவர்கள் வியாபார வேட்டைக்காகவும், குட்டிகிருஷ்ணன் நாயர் போன்றவர்கள் உத்தியோக வேட்டைக்காகவும்தான், 'தட்சிண ராஜ்யம்' அமையவேண்டும் என்று சொல்லுகின்றனர். தட்சிணப் பிரதேசம் வட நாட்டுக்குக் கட்டுப்பட்டது. ஆனால் திராவிடக் கட்சியினரின் 'திராவிட நாடு' கோரிக்கை, 'வட நாட்டு ஆதிக்கத்திலிருந்து விடுபட்டு, தனிச் சுதந்திர சோஷலிச திராவிட நாட்டை அமைக்க வேண்டும்' என்பதுதான். ஆகவே, ஆந்திரா பிரிந்துபோன பிறகு தட்சிண ராஜ்யம் அமையவேண்டும் என்று சொல்வதில் அர்த்தமில்லை; அந்த 'அடிமை தட்சிணப் பிரதேசத்தை' எவரும் விரும்பவும் மாட்டார்கள்.

"கம்யூனிஸ்டு கட்சியைச் சேர்ந்த தோழர் ஜீவானந்தம் அவர்கள் இச்சபையில் பேசும்போது, தேவிகுளம், பீர்மேடு ஆகிய பகுதிகள் எந்த மாநிலத்துடன் சேரவேண்டுமென்பதில் வெண்டைக்காய் போன்று வழ வழா என்று பேசினார்களே தவிர, தெள்ளத் தெளிய தமிழர்களுடைய பிரதேசங்கள் என்னென்ன—எந்தெந்தப் பகுதிகள் தமிழகத்துடன் இணைய வேண்டுமென்று குறிப்பிடவில்லை. அவர் பேசியதிலிருந்து, கம்யூனிஸ்டுக் கட்சியினரின் கொள்கை என்ன என்பதே தெரியவில்லை. முன்பு ஆந்திராவிற்கு வாக்களிக்கும்போதும் கம்யூனிஸ்டுக் கட்சியைச் சேர்ந்த தமிழ் உறுப்பினர்கள், ஆந்திராவிற்குத்தான் வாக்களித்தார்கள்; இன்றைக்கும், திரு-கொச்சி தமிழ்ப் பகுதிகள் பற்றி வாக்களிக்கும்போது, மலையாளிகளுக்குச் சாதகமாக வாக்களித்து, தமிழகத்தைக் காட்டிக் கொடுக்கமாட்டார்கள் என்று நம்புகிறேன்; தமிழ் நாட்டு கம்யூனிஸ்டுக் கட்சியின் நலத்தைப் பாராமல், அவர்களது வாக்குகள், தமிழகத்தின் நலனைப் பொறுத்ததாகவே இருக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்,"

*—என்று, 23—11—55 அன்று நடைபெற்ற சென்னை சட்டசபை கூட்டத்தில், மாநில புனரமைப்புக் குழுவின் சிபாரிசுகள் குறித்த விவாதத்தின்போது, தோழர் ஏ. கோவிந்தசாமி அவர்கள் பேசுகையில் குறிப்பிட்டார். (அவர் பேச்சு முடியவில்லை; தொடர்ந்து வெளிவரும்.)*

---

*லாரி போக்குவரத்தை சர்க்கார் உடைமையாக்கக் கூடாதென்று மாநில சர்க்கார்களுக்கு மத்திய சர்க்கார் உத்தரவு பிறப்பித்துள்ளதாம்.*

*சென்னை, நவ. 23—*

*'நூல் விற்பதற்கு லைசென்சு வாங்க வேண்டும்' என்று இருந்து வரும் கட்டுப்பாடு உத்தரவு ரத்து செய்யப்பட்டுவிட்டது.*

---

## 'புத்தி — செயல் இரண்டும் வேண்டும்'

*"இந்திய மக்களில், தமிழ் நாட்டிலுள்ளவர்கள்தான் மிகவும் புத்திசாலிகளாக இருக்கின்றனர்; ஆனால் புத்திசாலித்தனம் மட்டும் இருந்தால் போதாது; புத்தி—செயல் இரண்டும் இருந்தால் தான் பலன் கிடைக்கும்,"*

*என்று, சோஷலிஸ்டுத் தலைவர் டாக்டர் லோகியா, கூட்டமொன்றில் பேசுகையில் குறிப்பிட்டிருக்கிறார்.*

## வேலை நிறுத்தம் கைவிடப்பட்டது

*விசாகப்பட்டினம், நவ. 25—*

*இன்று முதல் வேலை நிறுத்தத்தில் ஈடுபடுவது என்று முடிவு செய்திருந்த இந்துஸ்தான் கப்பல் தொழிலாளர் சங்கத்தவர் தங்களது முடிவை மாற்றிக்கொண்டு விட்டதாகத் தெரியவருகிறது.*

*இத்தகவலை வெளியிட்ட அந்த நிறுவன மானேஜிங் டைரக்டர், தொழிலாளர்கள், மாநில இன்ஷ்யூரன்ஸ் திட்டத்தினின்றும் விலக்களிக்கப்படுவர் என்றும் தெரிவித்திருக்கிறார்.*

*வேலையிலிருந்து நீக்கப்பட்டவர்களைத் திரும்ப வேலையில் சேர்த்துக் கொள்வதுபோன்ற மற்ற முக்கியப் பிரச்சினைகளை தொழில் டிரிபியூனலுக்கு விடுவது என்ற முடிவுக்கு, யூனியன் நிர்வாகிகள் ஒப்புதல் தந்துள்ளனர் என்று தெரிவிக்கப்படுகிறது.*

---

## சென்னை ஆலைத் தொழிலாளர்கள் வேலைக்குத் திரும்பினர்

### நிர்வாகிகளுடன் புதிய உடன்பாடு

*தகராறில் முடிவு காண உயர் நீதிமன்ற நீதிபதியை நடுநிலையாளராக ஏற்பதற்கு இருதரப்பிலும் முடிவு*

சென்னை, நவ. 25—

நேற்று காலை 6 மணி முதல் துவங்கி வெகு அமைதியாக நடைபெற்றுவந்த சென்னை பி. அண்டு சி. ஆலைத் தொழிலாளர்களின் வேலை நிறுத்தம், மாலையுடன் நிறுத்தப்பட்டிருக்கிறது.

தொழிலாளர் யூனியனுக்கும்—நிர்வாக அதிகாரிகளுக்கும் இடையே ஏற்பட்ட ஒரு சமரச ஒப்பந்தமே இவ்வேலை நிறுத்தம் நிறுத்தப்பட்டதற்குக் காரணமாகும்.

ஆலை நிர்வாகிகளும், தொழிலாளர் பிரதிநிதிகளும், தங்களுக்கிடையே உள்ள தகராறுகளைக் குறித்து விசாரிக்க, சென்னை உயர் நீதிமன்ற நீதிபதிகளுள் ஒருவரை தேர்ந்தெடுத்து நடுநிலையாளராக ஏற்றுக்கொள்வதற்கு ஒப்புதல் தந்த பின்னரே வேலை நிறுத்தம் கைவிடப்பட்டிருக்கிறது.

*நேற்று மாலை, சென்னை கான்ஸ்மித் நகர் மைதானத்தில் நடைபெற்ற, மேற்படி ஆலைத் தொழிலாளர்கள் ஆயிரக்கணக்கில் கூடியிருந்த பொதுக்கூட்டத்தில் இந்த முடிவைத் தெரிவித்த மேற்படி யூனியன் தலைவர் திரு. எஸ். சி. சி. அந்தோணி எம்.எல்.ஏ., அவர்கள், இன்று முதல் தொழிலாளர்கள் அனைவரும் வேலைக்குச் செல்லும்படி கேட்டுக்கொண்டிருக்கிறார்.*

*வேலை நிறுத்தத்தின்போது, தொழிலாளர் கடைப்பிடித்த ஒற்றுமையையும், நேர்மையையும் அவர் வெகுவாகப் பாராட்டியிருக்கிறார். அவர்கள், இந்த நாட்டில் உள்ள மற்ற தொழிலாளர்களுக்கு முன்மாதிரியாக நடந்து கொண்டனர் என்றும் குறிப்பிட்டிருக்கிறார்.*

*மாநில தொழிலமைச்சர் பக்தவத்சலம் அவர்களது முன்னிலையிலேயே, ஆலை நிர்வாகிகள், யூனியன் பிரதிநிதிகளைச் சந்தித்து, தகராறு பற்றியப் பிரச்சினையில் உயர்நீதி மன்ற நீதிபதி ஒருவர் நடுநிலையாளராக இருக்கவேண்டுமென்பதைத் தாங்கள் ஒப்புக்கொள்வதாகத் தெரிவித்ததாயும், ஆலை நிர்வாகிகள், தொழிற்சங்கம் ஆகிய இருசாராரும் கலந்து பாராவது ஒரு நீதிபதியைத் தேர்ந்தெடுப்பர் என்றும், அவர் அக்கூட்டத்தில் விளக்கம் தந்திருக்கிறார்.*

---

## போலீசார் 'கிளர்ச்சி'யின் எதிரொலி

### கிழக்கு வங்க மந்திரி சபையை 'டிஸ்மிஸ்' செய்ய முடிவு?

கராச்சி, நவ. 24—

கிழக்கு வங்க மாநிலத்தில் நடைபெற்று வரும் போலீஸ் கலகங்களை அடக்குவதற்கான நடவடிக்கையாக, அங்கு ஆட்சி பீடத்தில் அமர்ந்திருக்கும் அபு உசேன் சர்க்கார் என்பாரது தலைமையின்கீழ் உள்ள மந்திரி சபை விரைவிலேயே பதவியை விட்டுத் துரத்தியடிக்கப்படலாம் என்பதற்கான அறிகுறிகள் காணக் கிடக்கின்றன என்று கராச்சியிலிருந்து வெளியாகும் இதழ் ஒன்று அறிவித்திருக்கிறதாம்.

*கடந்த 3, 4 நாட்களாக, டாக்கா, நாராயணகஞ்ச் ஆகிய இடங்களிலிருக்கும் போலீசார் தங்களது வேலைக்குச் செல்லவில்லை என்றும் அப்பத்திரிகை தெரிவிக்கிறதாம்.*

*இச்செய்தியை அறிவித்த அப்பத்திரிகை, மேலும், அபு உசேன் மந்திரி சபை விலக்கப்பட்ட பின்னர், ஒருவேளை கவர்னர் நேரடி ஆட்சி அங்கு பிரகடனப் படுத்தப் படலாம் என்றும், அப்படியில்லாவிட்டால், தற்போது பாகிஸ்தான் மத்திய உள்நாட்டு இலாகா அமைச்சரும், ஐக்கிய முன்னணியின் தலைவருமான ஏ. கே. பாசில் ஹக் என்பார் முதலமைச்சராக நியமனம் பெறலாம் என்றும் குறிப்புத் தந்திருக்கிறது.*

*தற்போது முதலமைச்சராக இருக்கும் அபு உசேனும் ஐக்கிய முன்னணிக் கட்சியினர்தான் என்பதும் குறிப்பிடத்தக்கது.*

---

*பஸ் போக்குவரத்து படிப்படியாகவே அரசாங்க உடைமையாக்கப் படவேண்டுமென மாநிலங்களுக்கு மத்திய சர்க்காரால் உத்தரவு பிறப்பிக்கப்பட்டுள்ளதாம்.*

---

# நம் நாடு



தி.மு.க.தின இதழ் ஆசிரியர் இரா.நெடுஞ்செழியன்

சென்னை 25—11—'55 வெள்ளி


# காங்கிரஸ் மேலிடந்தான்

மாகாண புனரமைப்புக் குழுவின் சிபாரிசுகளும், அதன் மீது காங்கிரஸ் மேலிடத்தார் செய்த முடிவுகளும், இந்தியத் துணைக்கண்டத்தின் ஒவ்வொரு பகுதியிலும் கொந்தளிப்பை உண்டாக்கியிருக்கிறது. ஒன்றிரண்டு இடங்களைத் தவிர்த்து மற்ற பகுதிகள் அனைத்திலும் அந்தக் கொந்தளிப்பு பெருஞ் சூறாவளியாக உருவெடுத்திருக்கிறது. தங்கள் வாழ்நாளில் பெரும் பகுதியை அரசியல் கிளர்ச்சியிலேயே செலவழித்துப் பழகிவிட்ட காங்கிரஸ் மேலிடத்தாருக்கு, தங்கள் போக்கால் விளைந்துள்ள கொந்தளிப்பைக் காண திகைப்பும், கண் கலக்கமுந்தான் ஏற்படும்.

கன்னட மொழி வழங்கும் பகுதி நீங்கலாக இன்றுள்ள பம்பாய் மாகாணத்தை அப்படியே அமைக்க வேண்டுமென்பது மாகாணப் புனரமைப்புக் குழுவின் சிபாரிசு ஆகும். அச்சிபாரிசு மராட்டிய மொழியினருக்குத் திருப்தி அளிக்கவில்லை. பம்பாயைத் தலைநகராகக் கொண்ட மராட்டிய மண்டலம் அமைக்கப்படவேண்டும் என அவர்கள் கோரினர்.

அக்கோரிக்கை குஜராத் பண மூட்டைகளுக்கு பிடித்தமானதாக இல்லை. அம்மொழிவழி வந்த சிறுபான்மையினரான பம்பாய் தொழிலதிபர்கள் பம்பாயைத் தனி மாகாணமாக ஆக்கிவிடவேண்டும் என காங்கிரஸ் மேலிடத்தைத் துளைத்தனர். ஆசிய ஜோதியும் பணத்திமிங்கலங்களின் விருப்பத்திற்கு இணங்க வேண்டியதாகப் போய்விட்டது. இந்த உண்மையை இந்தியப் பிரதமரே, மக்கள் சபை காங்கிரஸ் கட்சியினரிடம் வெளிப்படையாகக் கூறியுள்ளதாகவும் சொல்லப்படுகிறது.

பம்பாயைத் தலைநகராகக் கொண்டு குஜராத் மாகாணம் அமைக்கப்படவேண்டுமென்பது குஜராத்திகளின் விருப்பம். அந்த விருப்பத்திற்கு ஒப்பினால், மராட்டியர்களின் கடுங்கோபத்திற்கு ஆளாக வேண்டுமே என்ற அச்சத்தினால், பம்பாய் நகரை ஒரு தனி மாகாணமாக அமைப்பதின் மூலமாகவாவது, மராட்டியரை வாயடைக்கச் செய்துவிடலாம் எனக் காங்கிரஸ் மேலிடம் கருதியது; அந்த நினைப்பு ஈடேறவில்லை.

குஜராத்துடன் இணைந்து பம்பாய் நகரம் இல்லையானாலும், மராட்டியரின் ஆதிக்கம் அங்கில் தலைதூக்காது என்ற காரணத்தினால், பம்பாய் நகரை தனி மாகாணமாக்குவதில் குஜராத்தியர்களுக்குத் திருப்தி இருந்தது. அம்மொழியினரின் பணப் பிடியில்தானே பம்பாய் மாகாண நிர்வாகம் இருக்கப்போகிறது என்ற எண்ணத்தில், குஜராத்தியர்கள் தங்கள் விருப்பம் வேறு ஒரு உருவில் வெற்றி பெற்றுவிட்டதற்குக் களிப்பும் கொண்டனர்.

பம்பாய் நகரை தனி மாகாணமாக்குவதில் உள்ள இரகசியத்தை பெரும்பான்மையரான மராட்டியர்கள் நன்கு புரிந்துகொண்டனர், எப்படியும் பம்பாயைத் தலைநகராகக் கொண்ட மராட்டிய மண்டலத்தைப் பெறுவது என்ற உறுதி பூண்டனர்.

மராட்டிய மக்களின் மனப்போக்கும், நெஞ்சுரமும், வீரப்பண்பும் ஆசிய ஜோதி அறியாததல்ல. அது போன்றே பம்பாய் அமைச்சர்களும் மராட்டியர்களின் மனவளத்தையும் குணநலத்தையும் தெரிந்தவர்களேயாவர்.

எனவே, பம்பாய் நகரை தனி மாகாணமாக்கக் கருதிய பொழுதே, அதுபற்றி மராட்டியர் எந்நிலை பெறுவார்கள் என்பதை முன் கூட்டியே யூகித்து அறிந்துகொண்டிருக்க வேண்டும் இந்தியப் பிரதமர்; அறியாததான் மராட்டியர் சீற்றத்தை பிரதமர் தூண்டிவிட்டார் என்று கொள்ள முடியாது. எப்படியும் படைபலத்தைக் கொண்டு, மராட்டியரைப் பணிய வைத்துவிடக்கூடும் என்ற அசைக்க முடியாத நம்பிக்கையினால்தான் பண்டிதர், மராட்டியர்களுக்கு பம்பாயை மறுத்திருக்க வேண்டும் என்று நிச்சயிக்க வேண்டியதாகிறது.

தங்களைவிட்டு பம்பாயைத் துண்டித்துவிடுவதை மராட்டியர்கள் ஒருக்காலும் ஒப்பார்கள்—பலமான கிளர்ச்சியில் கண்டிப்பாக ஈடுபட்டே தீருவார்கள் என்ற உண்மை தெளிவாகத் தெரிகிறபொழுது, அவர்கள் கோபத்தைக் கிளறிவிட்டு வேடிக்கை பார்த்தது எந்த வகையிலும் நியாயமாகாது. காங்கிரஸ் மேலிடத்தாரின் இந்தச் சேட்டைதான், பம்பாயில் நடைபெற்ற மராட்டியர்களின் முறைகெட்ட செயல்களுக்கு மூலகாரணமுமாகும். மராட்டியர்களின் சீழிவுப் பணி எந்த அளவு கண்டிக்கத் தக்கதோ, அதற்குக் கொஞ்சமும் குறையாத அளவில், மராட்டியர்களுக்கு ஆத்திரமூட்டிய காங்கிரஸ் மேலிடத்தாரின் கோணல் புத்தியும் வன்மையாகக் கண்டிக்கத் தக்கதாகும். எனவே மராட்டியர்களின் 'ஆகஸ்ட் வேலை'க்கு முழுதும் பொறுப்பாளிகளாக்கப்பட வேண்டியவர்கள் காங்கிரஸ் மேலிடத்தாரேயாவர்.

## 100 தீக்குச்சித் தொழிற்சாலைகள்

சென்னை மாநிலத்தில் ஏற்படுத்தப்படுமாம்!

சென்னை, நவ. 23—

"இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தின்கீழ் சென்னை மாநிலத்தில் 100 தீக்குச்சித் தொழிற்சாலைகள் ஏற்படுத்தப்படும்," என்று தொழில் அமைச்சர் பக்தவத்சலம் சென்னை சட்ட சபையில் தெரிவித்துள்ளார்.

ரூ. 25 இலட்சம் திட்டமொன்றில், மலபாரில் 50 கயிறு உற்பத்தி கூட்டுறவுச் சங்கங்கள் ஏற்படுத்தும் திட்டமொன்று இருப்பதாயும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

# 'ஏழை-எளியோரிடத்தில் நிதி திரட்டி நல்ல பல காரியங்களைச் செய்துள்ளோம்'

## மதுவிலக்கு அமுலாகும் இலட்சணம்!

சட்டத்தைத் திருத்தும் பிரச்சினை பரிசிலனையில் இருக்கிறதாம்!

சென்னை, நவ. 22—

"1954—55-ம் ஆண்டில், மதுவிலக்குக் குற்றங்களையொட்டி 1,03,976 பேர் கைது செய்யப்பட்டனர்; 7,360 பெண்களும் இது சம்பந்தமாகக் கைது செய்யப்பட்டனர்; இது, 1952-53ல் கைது செய்யப்பட்டோர் தொகைக்கு 21·5 சதவிகிதமும், 1953-54ல் கைது செய்யப்பட்டுள்ள தொகைக்கு 20·20 சதவிகிதமும் அதிகமாகும். மதுவிலக்கு அமுலுக்கு 1954-55-ல், ரூ 37,79,000 செலவாயிற்று,"

என்று, கேள்வி ஒன்றுக்குப் பதிலளிக்கையில் சென்னை சட்டசபையில் மதுவிலக்கு அமைச்சர் பரமேசுவரன் தெரிவித்துவிட்டு மேலும் சொன்னார்:—

"மதுவிலக்குக் குற்றங்களைக் குறைப்பதற்கு, மதுவிலக்குச் சட்டத்தைத் திருத்தும் பிரச்சினை, மத்திய, சென்னை சர்க்கார்கள் பரிசிலனையில் இருக்கிறது; இப்போதுள்ள நிலையில் மதுவிலக்குக் கொள்கையை மாற்ற வேண்டியதில்லை; படிப்படியாகமதுவிலக்குக் கொள்கை வெற்றி பெற்று வருகிறது. மதுவிலக்கு அமுல் பற்றி பரிசிலனை செய்ய குழு ஒன்றை நியமிப்பதற்கு அவசியமே கிடையாது."

## இடுகாட்டிலும் வேறுபாடுகள்!

ஒழிப்பதற்கான நடவடிக்கைகளை சென்னை சர்க்கார் ஆராய்கிறதாம்!

சென்னை, நவ. 23—

"சாதி இந்துக்களுக்கு என்றும், அரிசனங்களுக்கு என்றும் தனித் தனியாக இடுகாட்டில் இருக்கும் வேறுபாடுகளை ஒழிக்கும் பிரச்சினையை சர்க்கார் கவனித்து வருகிறது,"

என்று, அரிசன இலாகா அமைச்சர் பி. பரமேசுவரன், கேள்வி ஒன்றுக்குப் பதிலளிக்கையில் குறிப்பிட்டுவிட்டு மேலும் சொன்னார்:—

"இந்த வேறுபாடுகளைப் போக்கி இடுகாட்டில் வசதிகளைச் செய்து தருவதற்கு என்ன நடவடிக்கைகளை எடுக்கலாம் என்பதை ஆலோசித்து அறிவிக்கும்படி கலெக்டர்கள், மாவட்ட போர்டுகள், பஞ்சாயத்து போர்டுகளைச் சர்க்கார் கேட்டுக்கொண்டிருக்கிறது."

கோவில்களைப் பாதுகாக்க

## ரூ. 2 இலட்சமாம்!

சென்னை சர்க்கார் தாராளம்

சென்னை, நவ. 23—

இம்மாநிலத்தில் பல்வேறு பகுதிகளிலுள்ள சிறிய கோவில்களைப் பழுதுபார்ப்பதற்காக ரூ. 2 இலட்சம் சர்க்கார் அனுமதித்துள்ளனராம்!

பல கோவில்கள் பழுது பார்க்கப்படவேண்டிய நிலைமையிலிருப்பதால், இந்தத் தொகை முழுவதும் வரும் மார்ச் மாதத்திற்கு முன்பே செலவிடப்படுமென்று செய்தி ஒன்று கூறுகிறது.

ரூ. 3 கோடி செலவில் சோடா உப்பு தொழிற்சாலை

திருநெல்வேலி மாவட்டத்தில் நிறுவப்படுமாம்!

சென்னை, நவ. 23—

சோடா உப்பு தயாரிக்கும் தொழிற்சாலை ஒன்று திருநெல்வேலி மாவட்டத்தில், சுமார் ரூ. 3

(4-ம் பக்கம் பார்க்க)

## சேலத்தில் அண்ணாதுரை விளக்கம்

"திராவிட முன்னேற்றக் கழகம், நிதி தேவைப்படுகிறபோதும், கூட்டச் செலவுகளுக்கு நிதி தேவைப்படுகிறபோதும், ஏழைத் தொழிலாளர்களிடத்திலும், விவசாயிகளிடத்திலும், நெசவாளர்களிடத்திலும்தான் அணுகி, சிறுசிறு தொகைகளைக் கேட்டு வாங்கியிருக்கிறது. பெரும் பணக்காரர்களிடம் திராவிட முன்னேற்றக் கழகம் போவதில்லை; நம் கழகம் துவங்கிய நாளிலிருந்து பொருளாதாரத்திலே மிகக் கஷ்டப்பட்டு, சிறுசிறு தொகைகளாகச் சேர்த்து இன்றைய தினம் நல்ல—நிலையான பல காரியங்களைச் செய்திருக்கிறோம்.

"அதாவது, ரூ. 30,000 பெறுமான பெரிய கட்டிடத்தை வாங்கியிருக்கிறோம்; ரூ. 30,000 பெறுமான அச்சகத்தை நிறுவியிருக்கிறோம்; ரூ. 20,000 பெறுமான மைதானத்தை அண்மையில் வாங்கியிருக்கிறோம்; ரூ. 27,000 பெறுமான கைத்தறி ஆடைகளை, புயலால் பாதிக்கப்பட்ட தஞ்சை, திருச்சி மாவட்ட மக்களுக்கு வழங்கியிருக்கிறோம்; மும்முனைப் போராட்டத்தில் துப்பாக்கிக் குண்டுகளுக்குப் பலியான தோழர்களுக்கு ரூ. 2,000, 3,000 வீதம் அவர்கள் குடும்பத்திற்கு நிவாரணம் கொடுத்திருக்கிறோம்; நெல்லிக்குப்பத்தில், காங்கிரஸ்காரர்களால் தாக்கப்பட்டு கொலையுண்ட மஜீத் குடும்பத்தாருக்கு ரூ. 2,000 பெறுமான நிலத்தை வாங்கி அளித்திருக்கிறோம்; ஆசிரியர் வேலாயுதம் அவர்களது மகளுடைய திருமணத்தில் ரூ. 1,000 நன்கொடை அளித்திருக்கிறோம்; இதே மாதிரி பல பொது உதவிகளை நாம் செய்திருக்கிறோம்; இவ்வளவு பணத்தையும் ஏழை மக்களிடமிருந்து பெற்றோமே தவிர, பணக்காரரை அணுகி அல்ல. இந்த முறையிலே திராவிட முன்னேற்றக் கழகம், நாட்டின் சமுதாய—பொருளாதார—அரசியல் உரிமைகளைப் பெறுவதற்கு பலவிதமான முயற்சிகளைச் செய்து வருகிறது. அண்மையில், திருச்சியில் கூடவிருக்கும் மாநில மாநாட்டில் இதற்கு ஆக்கமும், ஊக்கமும் தரும் வகையில், பல நல்ல போராட்ட திட்டங்களை தீட்ட இருக்கிறது; அதே மாநாட்டில் அடுத்துவரும் பொதுத் தேர்தலில் நாம் நேரிடையாகப் போட்டியிடலாமா, வேண்டாமா என்ற முடிவுகளை நன்கு விளக்கிப் பேசி மாநாட்டுக்கு வரும் தோழர்களுடைய கருத்தை வாக்கெடுப்பு மூலமாக அறிந்து அதன்படி நடக்க இருக்கிறது,"

—என்று, அண்ணாதுரை அவர்கள், சேலம் சித்தேஸ்வரா டாக்கீசில் 20—11—55 காலை $10\frac{1}{2}$ மணியளவில் நடைபெற்ற சிறப்புக் கூட்டத்தில் உரையாற்றுகையில் குறிப்பிட்டார்.

கூட்டத்திற்கு மாணவர் தோழர் சுடர்மணி தலைமை தாங்கினார். தலைவர் தம் உரையில், தி. மு. கழகக் கொள்கைகளில் மாணவர்கள் மிக அக்கரையோடும், ஆர்வத்தோடும், கவனம் செலுத்தி வருவதாகக் குறிப்பிட்டு, இந்த நாட்டு உரிமையைப் பெறுவதற்கு எந்தத் தியாகத்தையும் மாணவர்கள் செய்யத் தயாராக இருப்பதாகவும் கூறினார். பின்னர், தோழர் தில்லை வில்லாளன், மாநில ஆட்சி பற்றியும், வடநாட்டு சர்க்காருடைய ஏகாதிபத்திய தன்மையை விளக்கியும் உரை நிகழ்த்தினார்.

### நிகழ்ச்சிகள்

20—11—55 காலை 10 மணிக்கு சேலம் நகர 18-வது வட்ட தி. மு. கழகப் புதிய கட்டிடத்தை தோழர் எஸ். ஏ. அன்புக்கரசு தலைமையில் அண்ணா அவர்கள் திறந்து வைத்தார். திராவிட முன்னேற்றக் கழகக் கட்டிடங்களை ஒவ்வொரு வட்டத்திலும் சொந்தமாக ஏற்படுத்த எல்லா தோழர்களும் முயற்சி செய்ய வேண்டுமெனவும், கழகத்தில் படிப்பகங்கள் அமைத்து பத்திரிகைகளும் நல்ல நூல்களையும் வைத்து பொதுமக்களுக்கு இலவசமாகப் படிப்பதற்கு வசதி ஏற்படுத்த வேண்டுமெனவும், ஏராளமான தோழர்கள் கழகத்தில் உறுப்பினராகச் சேரவேண்டுமெனவும் கேட்டுக்கொண்டார்.

### சேலம் கல்லூரியில்

அன்று மாலை 4·30 மணிக்கு, சேலம் கல்லூரியில் தமிழ் கழகச் சார்பில், தமிழ்ப் பேராசிரியர் திரு. ஈா. தேவநேயப் பாவாணர் அவர்கள் தலைமையில் கூட்டம் துவங்கியது. கல்லூரி முதல்வர் திரு. அச்சுதன் அவர்கள், தலைவர் பாவாணர் அவர்களுக்கும், அண்ணா அவர்களுக்கும் மலர் மாலைகள் அணிவித்தார். தலைவர் முன்னுரைக்குப் பின், அண்ணா அவர்கள், கல்லூரி மாணவர்களுக்கும் அரசியலுக்குமுள்ள தொடர்பைக் குறிப்பிட்டு, அரசியலில் மாணவர்கள் நேரடியாகக் கலந்துகொள்ளக் கூடாதென்றாலும், அரசியலை நன்றாகத் தெரிந்துகொண்டிருக்க வேண்டுமென்றும், மாணவர்கள் தங்கள் படிப்பிலேயே அதிகக் கவனம் செலுத்த வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டு உரை நிகழ்த்தினார்.

### பொதுக்கூட்டம்

அன்று மாலை 6—30 மணிக்கு, வி. மார்க்கெட் மைதானத்தில் தோழர் இ. ஆர். கிருஷ்ணன் தலைமையில் நடைபெற்ற கழகப் பொதுக்கூட்டத்தில், தோழர்கள் தில்லை வில்லாளன், ஈ. வி. கே. சம்பத் ஆகியோர், டில்லி ஏகாதிபத்தியத்தின் பிடியில் இருந்து திராவிடம் மீட்கப்படவேண்டிய அவசியம் குறித்துச் சொற்பொழிவாற்றினர்.

பிறகு அண்ணா அவர்கள் பேச எழுந்ததும், பல நகரக் கிளைக் கழகங்கள் சார்பிலும், தனிப்பட்டவர்கள் சார்பிலும் மலர் மாலைகளும், கைத்தறி ஆடைகளும் அணிவிக்கப்பட்டன. சாமிநாதபுரம் 3-வது வட்டம் தி. மு. கழகச் சார்பில் வரவேற்பு இதழ் வாசித்து அளிக்கப்பட்டது.

### மாநில மாநாட்டு நிதி

மாநில மாநாட்டு நிதிக்காக, நகரக் கழகத்தின் சார்பிலும், தனிப்பட்ட தோழர்களின் சார்பிலும், பல கிளைகளின் சார்பிலும், ரூ. 638—2—6 அண்ணா அவர்களிடம் தரப்பட்டது.

அண்ணா அவர்கள் நிதியைப் பெற்றுக்கொண்டு, நிதி தந்துதவிய தோழர்களுக்கு நன்றி தெரிவித்துக்கொண்டு, தி. மு. கழகம் ஆறு ஆண்டு காலமாக சாதித்த அரும் பெரும் சாதனைகளையும், அனுபவித்த பெரும் தொல்லைகளையும், அதனால் அடைந்த வளர்ச்சியையும் விளக்கமாக எடுத்துரைத்தார்.

## நகர நடைபாதைகளில் 6,500 குடும்பங்கள்!

சென்னை நகரின் சாலைத் திண்ணைகளில் 6,500 குடும்பங்கள் வசித்து வருவதாகக் கூறப்பட்டுள்ளது.

1954-வது ஆண்டில், அதற்கு முந்தைய ஆண்டைக் காட்டிலும் 4,979 குழந்தைகள் அதிகமாகப் பிறந்திருக்கின்றனவாம்!

One side of the page is dark



## 'நட்புறவிலும் போட்டியா?'

குருஷ்சேவ் வியப்பு!

நங்கல், நவ. 22—

"ரஷ்யா—இந்தியா ஆகிய நாடுகளிடையே உள்ள நட்புறவையும், ஒற்றுமையையும் வெளிப்படுத்திக்கொள்ள வேண்டுமென்ற ஒரே எண்ணத்துடன் தான் நாங்கள் இங்கு வந்தோம்; இந்தியாவின் இறுதி காலம் வரையிலும் அதனுடைய கஷ்ட நஷ்டங்களில் சோவியத் ரஷ்யா பங்கேற்றுக்கொள்ளும்; இந்தியா தன்னுடைய நாட்டை தொழில் மயமாக்கும் திட்டத்தை எந்த முறையில் நிறைவேற்றுவது என்பது பற்றிய துறையிலும், அத்துறைக்குத் தேவையான தொழில் நுணுக்க நிபுணர்களைப் பயிற்றுவிப்பது, இன்னும் இவைபோன்ற மற்றத் துறைகளிலும், சோவியத் நாடு, எந்த வகையான ஒத்துழைப்பையும், உதவியையும் தரத் தயாராக இருக்கிறது,"

என்று, சோவியத் கம்யூனிஸ்டு கட்சிச் செயலாளர் குருஷ்சேவ் அவர்கள் இங்கு குறிப்பிட்டார்.

'சோவியத் பிரதமர் புல்கானினும், கம்யூனிஸ்டு கட்சிச் செயலாளர் குருஷ்சேவும், இந்திய நாட்டவரைச் சுரண்டும் இரகசிய முயற்சியுடனேயே அண்மையில் இந்தியாவிற்குச் சென்றிருக்கின்றனர்,'

என்று, சில மேல்நாட்டுச் செய்தி நிறுவனங்கள் தெரிவித்துள்ள குறிப்புக்களை வன்மையாக மறுத்துப் பேசுகையிலேயே அவர் இவ்வாறு குறிப்பிட்டிருக்கிறார்.

அவர் மேலும் இதுபற்றிக் குறிப்பிடுகையில் சொன்னார்:—

"மேற்கத்திய நாடுகள் இவ்வாறு கூறுவதின் மூலம், இரு நாடுகளுக்குமிடையேயுள்ள நட்புறவை இந்த அளவிற்குத்தான் புரிந்துகொண்டிருக்கின்றன என்று தெரிகிறது; அப்படி அவர்கள் புரிந்துகொண்டிருந்தால் அதுபற்றிக் கவலைப்படவில்லை. உதவி செய்யும் மனப்பான்மை விட்டுவிட்டு, அணுகுண்டுத் தயாரிப்பிலேயே முழுக் கவனம் செலுத்திக்கொண்டிருக்கும் அவர்களைவிட நாம் எவ்வளவோ மேலானவர்கள்தான்.

'இந்தியாவுடன் நட்புறவு கொள்வதிலும் மேற்கத்தியர் எங்களுடன் போட்டியிடுவதாக இருந்தால் அவர்கள் தாராளமாகச் செய்யட்டும். அணுகுண்டுகளைத் தயாரிப்பதில் போட்டியிடுவதைக் காட்டிலும், நட்புறவையும், ஒற்றுமையையும் பலப்படுத்திக்கொள்வதற்காகப் போட்டியிடுவது எவ்வளவோ நல்லதுதான்."

★

### கபடமிக்க உரையாம்!

லண்டன், நவ. 23—

டில்லி பாராளுமன்ற உறுப்பினர்களிடையே ரஷ்யப் பிரதமர் புல்கானின் ஆற்றிய உரையை, 'வெறும் ஆசார வார்த்தைகள்—கபடமிக்கவை' என்று, பிரிட்டன் வெளிநாட்டு விவகார இலாகா காரியாலயக் குறிப்பொன்று கூறுகிறது.

## தொடக்கப்பள்ளி

கட்டணங்களுக்கு வரம்பு

தனிப்பட்டவர் நிர்வாகத்தின் கீழ் உள்ள தொடக்கப்பள்ளிகளில் விதிக்கப்படும் பள்ளிக் கட்டணங்களுக்கு, ஒரு வரம்பை நிர்ணயிப்பதற்கு அரசாங்கம் ஆலோசனை செய்துவருகிறது என்று, நிதி அமைச்சர் சுப்பிரமணியம் சட்ட சபையில் கூறியுள்ளார்.

சில பள்ளிகளின் நிர்வாகத்தினர், பள்ளிக் கட்டணங்களின் மூலம் நல்ல இலாபம் சம்பாதிப்பது தனக்குத் தெரியுமென்றும் கூறியுள்ளார்.

* * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * *

தலைமைக் கழகம்: அறிக்கை—31/55

## தி. மு. கழக உறுப்பினர் சேர்த்தல்

### 1955 டிசம்பர்—1956 சனவரி

ஆகிய இரண்டு திங்களும்

### உறுப்பினர் சேர்க்கும் காலமாகும்

★

(1) திராவிட முன்னேற்றக் கழகத்தின் பழைய உறுப்பினர்களைப் புதுப்பிப்பதற்கும், புதிய உறுப்பினர்களைச் சேர்ப்பதற்கும் உரிய காலமாக, 1955 டிசம்பர்—1956 சனவரி ஆகிய இரண்டு திங்கள்களும் தேர்ந்தெடுக்கப்படுகின்றன.

(2) இப்பொழுதுள்ள உறுப்பினர்கள் 1956 சனவரித் திங்கள் 31-ம் நாளுக்குள் தம் உறுப்பினர் தகுதியைப் புதுப்பித்துக் கொள்ளவேண்டும். அதற்குள் புதுப்பித்துக் கொள்ளாவிட்டால், 1956 பிப்ரவரி 1-ஆம் நாளிலிருந்து தி. மு. கழக உறுப்பினர் தகுதியை அத்தகையோர் இழந்துவிட்டதாகக் கருதப்படுவர். அதற்குப் பிறகு சேர்பவர்களுக்குப் பழைய உறுப்பினர் தகுதி சேர்த்துக் கணக்கிடப்படமாட்டாது; புதிய உறுப்பினர் என்றமுறையிலேயே நோக்கப்படுவர்.

(3) உறுப்பினரைப் பதிவு செய்யும் விண்ணப்பத் தாள்களை அந்தந்த மாவட்டக் கழகங்களிலிருந்து அந்தந்த மாவட்டத்தைச் சேர்ந்த கிளைகள் பெற்றுக்கொள்ள வேண்டும்.

(4) கிளைக் கழகம் தோற்றுவிக்கக்கூடிய, ஆனால் இதுவரையில் தோற்றுவிக்காத இடத்தில் (சிற்றூர் அல்லது பேரூர் அல்லது நகரம்) முக்கியமான ஒருவர் பொறுப்பாளராக இருந்து விண்ணப்பத் தாளை மாவட்டச் செயலாளரிடமிருந்து பெற்று, உறுப்பினர்களைச் சேர்த்துத் தலைமைக் கழகத்திற்கு அனுப்பிவிட்டுப் பிறகு கிளைக் கழகம் அமைத்துக்கொள்ளலாம்.

(5) கிளைக் கழகம் அமைக்கக் குறைந்தது 25 உறுப்பினர்கள் வேண்டும். கிளைக் கழகம் அமைக்க முடியாத இடத்திலுள்ளவர்கள், பக்கத்திலுள்ள ஏதேனும் ஒரு கிளைக் கழகத்தில் உறுப்பினராகத் தம்மை இணைத்துக் கொள்ளலாம்.

(6) கிளைக் கழகச் செயலாளரும், கிளைக் கழகம் இல்லாத ஆனால் அமைக்கக்கூடிய இடத்தில் முக்கிய பொறுப்பாளருந்தான் உறுப்பினர்களைப் பதிவு செய்ய வேண்டும்.

(7) ஒவ்வொரு விண்ணப்பத் தாளிலும் இருபத்தைந்து உறுப்பினர்களைப் பதிவு செய்யலாம். ஒவ்வொரு கிளைக் கழகமும் எவ்வளவு உறுப்பினரைத் தம் ஊரில் சேர்க்கமுடியும் என்று எண்ணுகிறதோ அவ்வளவு உறுப்பினருக்குத் தேவையான பதிவுத் தாள்களை மாவட்டக்கிளையிலிருந்து பெற்றுக் கொள்ளலாம்.

(8) ஒவ்வொரு உறுப்பினரும், உறுப்பினர் கட்டணமாக அணா 8 செலுத்த வேண்டும்: ஒவ்வொரு உறுப்பினரும் செலுத்தும் எட்டு அணாவில் நான்கு அணாவைக் கிளைக் கழகம் வைத்துக்கொண்டு மீதி நான்கு அணாவை நேரே தலைமைக் கழகத்துக்கு அனுப்பிவைக்க வேண்டும். மாவட்டக் கிளைக்குச் சேரவேண்டிய தொகையைத் தலைமைக் கழகம் பிறகு கணக்குப் பார்த்து அந்தந்த மாவட்டக் கிளைகளுக்கு அனுப்பிவைக்கும்.

(9) உறுப்பினர் பதிவு செய்யப்பட்ட விண்ணப்பத் தாளையும், தலைமைக் கழகத்திற்குச் சேரவேண்டிய தொகையையும் (பாதிக் கட்டணத் தொகை) பொதுச்செயலாளர், தி. மு. கழகம், அறிவகம், இராயபுரம், சென்னை-13 என்ற முகவரிக்கு கிளைக் கழகச் செலவில் அப்படியே அனுப்பி வைக்க வேண்டும்.

(10) விண்ணப்பத் தாளும், கட்டணத் தொகையும் வந்து சேர்ந்தவுடன் உறுப்பினர் உரிமைச் சீட்டுக்கள் தலைமைக் கழகத்தால், கிளைக் கழகத்தின் மூலம் உறுப்பினருக்கு அனுப்பிவைக்கப்பெறும். உறுப்பினர் உரிமைச் சீட்டை, உறுப்பினர், சான்றுக்காக என்றென்றும் வைத்துக் காப்பாற்றி வைக்க வேண்டும்.

(11) கிளைக் கழகத்தில் வைத்துக் காப்பாற்றப்பட வேண்டிய சீட்டுக்களும், மாவட்டக் கழகத்தில் வைத்துக் காப்பாற்றப்பட வேண்டிய சீட்டுக்களும் அவ்வப்போது அனுப்பி வைக்கப்பெறும்.

(12) எந்தக் கிளைக் கழகத்திலும் தொடர்புகொள்ள விருப்பமில்லாமல் திராவிட முன்னேற்றக் கழகத்தின் உறுப்பினர் என்ற அளவிலேயே இருக்க விரும்புபவர்கள் தங்கள் பெயர், முகவரி, முன்பு உறுப்பினரா, அல்லவா என்ற விவரம் ஆகியவைகளைக் குறித்துக் கையெழுத்துப் போட்ட முடங்கலை எட்டு அணாவுடன் தலைமைக் கழகத்திற்கு அனுப்பிவைக்க வேண்டும். அத்தகையோருக்கு உறுப்பினர் உரிமைச் சீட்டு தலைமைக் கழகத்தால் அனுப்பி வைக்கப்பெறும்.

(13) பின்னால் எப்பொழுதாவது ஒரு கிளைக் கழகத்திலிருந்து மற்றொரு கிளைக் கழகத்திற்குத் தக்க காரணங்களோடு தம்மை மாற்றிக்கொள்ள விரும்புபவர்கள், தனியே நான்கு அணாவைத் தலைமைக் கழகத்திற்குச் செலுத்தி மாற்றிக் கொள்ளவேண்டும்.

(14) எந்தக் கிளைக் கழகமும் புதிய தேர்தல் நடத்தக் கூடாது. உறுப்பினர் சேர்க்கும் பணி மட்டுந்தான் இப்பொழுது நடைபெற வேண்டும்.

(15) பதினெட்டு வயதிற்கு மேற்பட்ட ஆண்கள்—பெண்கள் மட்டுமே தி. மு. கழகத்தில் உறுப்பினராகும் தகுதியுடையவராவர். மாணவர்கள் தி. மு. கழகத்தில் உறுப்பினராக வேண்டாம். அவர்கள் திராவிட மாணவர் முன்னேற்றக் கழகத்தில் உறுப்பினராகப் பதிவு செய்து கொள்ள வேண்டும்.

"அறிவகம்," சென்னை-13 21-11-1955

இரா. நெடுஞ்செழியன், பொதுச்செயலாளர், தி. மு. கழகம்

* * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * *

## 'ஊழல் மிகுந்த காங்கிரஸ் வேகமாகச் சரிந்துவருகிறது'

### பம்பாய் தி. மு. கழக ஆண்டு விழாவில் தோழர் தங்கப்பழம் விளக்கம்

பம்பாய் தி. மு. கழக ஆறுவது ஆண்டு நிறைவு விழா 2—11—55 மாலை 6-30 மணியளவில் தாராவி வ. உ. சி. திடலில் தோழர் சி. த. மு. இர. ஆரியசங்காரன் தலைமையில் நடைபெற்றது. ஏராளமான மக்கள் குழுமியிருந்து கூட்டத்தைச் சிறப்பித்தனர். தோழர்கள் தங்கவேலன் வரவேற்புரை ஆற்றினார்; எஸ். தங்கையா கழகக் கொடியை ஏற்றிவைத்து உரையாற்றினார்.

அடுத்து, தோழர் இரா. சு. தங்கப்பழம் அவர்கள் நீண்டதோர் சொற்பொழிவாற்றினார்.

பின்னர், தாராவி தி. மு. கழகம், பம்பாய் தி. மு. க. தலைமை நிலையம், கொலாபா தி. மு. கழகம், மகிழ்ச்சி இல்லம், மாதுங்கா தி. மு. கழகம், தானா தி. மு. கழகம், பாண்டுப் தி. மு. கழகம், தேவர் வாலிபர் சங்கம், சௌந்திர பாண்டியனார் பகுத்தறிவு மன்றம் ஆகியவைகளின் சார்பில் கைத்தறி ஆடைகளும், சயன் தி. மு. கழகம், திருவள்ளுவர் கலா மன்றம், அந்தேரி தி. மு. கழகம் ஆகியவைகளின் சார்பாக மலர் மாலைகளும் தோழர் தங்கப்பழம் அவர்கட்கு அணிவிக்கப்பட்டன.

தலைவர் பின்னுரைக்குப் பின் துணைச் செயலாளர் நன்றி நவின்றார்.

தோழர் இரா. சு. தங்கப்பழம் அவர்கள் பேசியதாவது:—

"ஆவடி காங்கிரசில், வரவேற்புக் குழுத் தலைவி அம்புஜம்மாள் தனது உரையில், தென்னாடு எவ்வாறெல்லாம் வடவரால் வஞ்சிக்கப்பட்டுள்ளது என்பதைத் திட்டவட்டமாகக் கூறி விட்டார்கள். அவர்களிடம் பிரித்தாளும் சூழ்ச்சிதான் நிறைந்துள்ளது என்பதற்கு இதைவிட வேறென்ன வேண்டும்?

100 பவுன்களே மூலதனமுள்ள கம்பெனிக்கு 1,000 ஜீப் கார்கள் ஆர்டர் கொடுத்து, அவை வந்த பின், 'உபயோகிக்க முடியாதவை' எனக்கண்டு, ஏலம் போட்டிருக்கின்றனர். இவ்வாறு, நாட்டு மக்களின் வரிப் பணம் ஆட்சியாளர்களால் பாழாக்கப்படுகிறது.

சுதந்திரம் வாங்கியதால், தாங்கள்தான் ஆளவேண்டுமென முன்வந்து நடத்தும் இவர்களின் செய்கை, அண்ணா கூறியது போன்று, 'பள்ளியைக் கட்டிய கொற்றனார்தான், உபாத்தியாயராகத் தகுதியுள்ளவன்'எனக் கூறுவதைத்தான் ஒத்திருக்கிறது என்பதை, அரசியலைப் புரிந்துள்ள எவரும் மறுத்துக்கூற முடியாது.

இவ்விதக் காரணங்களால்தான், பொறுப்புணர்ந்து காரிய மாற்றக் கூடியவர்கள், நாட்டை ஆள வேண்டுமென நாம் கூறி வருகிறோம்.

'திராவிட நாடு' அமையவேண்டும் என்று நாம் கோரும்போது, 'நாட்டைத் துண்டாடக்கூடாது' எனக் கூறி கண்டித்துவிட்டு, இன்று 'தட்சிணப் பிரதேசம்' பிரிப்பதில் ஈடுபடுகிறார்களென்றால், இத்தகையக் கண் துடைப்பு வேலையை என்ன பெயரிட்டழைப்பது? மத்திய சர்க்காருடன் எத்தகைய தொடர்பு மற்ற தனி நாட்டுத் தனியரசுதான், நாங்கள் கேட்டு வருவது; 'திராவிட நாடு' கோரிக்கைக்கும், 'தட்சிணப் பிரதேச' அமைப்புக்கும் எவ்வித உடன்பாடும் கிடையாது. மொழி வழியாய் பிரிக்கப்பட்டு, முறையாய்—தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய நான்கும் ஒன்றாய் இணைந்த கூட்டாட்சி நடத்துவதையே நாங்கள் நாடுகின்றோம். தற்போது ஆந்திரர்களோ, கன்னடர்களோ, அன்றி மலையாளத்தவரோ எங்கள் கோரிக்கையை ஏற்காதிருக்கலாம்; எனினும், சிறிது காலத்திலேயே அவர்களும் நிலைமையைப் புரிந்துகொண்டு, எங்களுடன் இணைந்து திராவிட நாட்டுக் கோரிக்கைக்காகப் பணியாற்ற முன்வருவார்கள் என்ற நம்பிக்கை எங்களுக்கு உண்டு.

இரண்டு ஆண்டுகளுக்கு முன்னரே நாம் கைத்தறித் துணிகளை ஆதரிக்க முன்வந்தோம்; அதுபோதெல்லாம் கவலை எடுக்காத காங்கிரசார்,எவ்விதத்திலோ தெளிவடைந்து, கைத்தறித் துணிகளை ஆதரிக்க முன்வந்துள்ளார்கள். தாங்களாகவே ஏதாவது உருப்படியான ஒன்றைத் திட்டமிட்டு, காங்கிரசார் செய்திருக்கிறார்களா என்றால், அதுவுமில்லை; பதவி ஆசைதான் அவர்களிடம் தலைதூக்கி நிற்கின்றது.

இத்தகு ஊழல் மிகுந்த காங்கிரஸ், தென்னாட்டில் வேகமாகச் சரிந்து வருகிறது இந்தச் சரிவை சரிக்கட்டத்தான், வேறு கட்சிகளிலிருந்து துரத்தப்படுபவர்களைத் தங்கள் கூடாரத்திற்கு அழைத்து பெருமைப்படுத்தி மகிழ்கின்றனர், காங்கிரசார்! இது, காங்கிரசிற்கு மேலும் அழிவைத் தேடித் தரத்தக்கதே அன்றி, காங்கிரசை வளர்க்கக் கூடியதல்ல! வேறு கட்சிகளிலிருந்து துரத்தப்பட்டவர்கள் புதிய காங்கிரஸ்காரர்களாகி, பம்பாய் போன்ற நகரங்களில் வந்து வாய்க்கு வந்தபடி கழகத்தை வசை பாடுவதினாலேயே இந்தப் பகுதியில் வாழும் தென்னாட்டு மக்கள்—திராவிடர்கள் தி. மு கழகத்திடம் கொண்டுள்ள பற்றினைக் கைவிட்டுவிடமாட்டார்கள் என்பதைக் காங்கிரசார் தெளிவாக உணர வேண்டும்."

## 315 'ஊசி'களில் 279 பயனற்றதாம்!

சென்னை சர்க்கார் நிலைமை

அமெரிக்க நிறுவனமொன்று சென்னை சர்க்காருக்கு விநியோகம் செய்த ரூ 63,323 மதிப்புள்ள 315 'ரேடியம் ஊசி'களில், 279 பயனற்றவையென சென்னை சட்டசபையில் சமர்ப்பிக்கப்பட்ட கணக்கு தணிக்கை அறிக்கையிலிருந்து தெரியவருவதாகச் செய்தி ஒன்று கூறுகிறது.

அந்த ஊசிகளைப் பழுதுபார்த்து சரிசெய்து அனுப்புவதற்காக, குறிப்பிட்ட அந்த நிறுவனத்திற்கே திருப்பி அனுப்புவதென சர்க்கார் முடிவு செய்து 1951 மார்ச் மாதத்தில் 63 ஊசிகள் திருப்பி அனுப்பப்பட்டதாம்; ஆனால், அவைகளைப் பழுது பார்த்து திருப்பி அனுப்புவதற்கு அந்நிறுவனம் தவறிவிட்டதாம். எனவே, ஊசியின் மொத்த விலையான 11,300 டாலரையும், அதற்காகும் செலவையும் திரும்பப் பெற்றபின் மீதியுள்ள ஊசிகளையும் திருப்பி அனுப்புவதென சர்க்கார் முடிவு செய்ததாம்; அதற்கும் அந்நிறுவனம் எவ்விதமான பதிலையும் அனுப்பாததால், இப்பிரச்சினையை, 'ஸ்தானிகர்' தோரணையில் பேச்சுவார்த்தைக்கு எடுத்துக் கொண்டுள்ளதாகவும் அச்செய்தி கூறுகிறது.

# கம்யூனிஸ்டுகளின் கண்ணோட்டம்: சென்னை நிதிமந்திரி சாடு!

## தேவிகுளம், பீர்மேட்டை சென்னையுடன் இணைக்க சென்னை சட்டசபை சிபாரிசு

*தமிழ் அபிலாஷைக்கு கம்யூனிஸ்டுகள் எதிர்ப்பு*

சென்னை, நவ. 24—

நடந்த நான்கு தினங்களாக, மாநில புனரமைப்புக் குழுவின் சிபாரிசுகள் குறித்த விவாதத்திற்குப் பின்னர், சென்னை சட்ட சபை இன்று, பெரும்பான்மை வாக்குகளால் தேவிகுளம், பீர்மேடு ஆகிய திரு—கோச்சி மாநிலத்திலுள்ள தமிழ்ப் பகுதிகளைத் தாய்த் தமிழகத்துடன் இணைக்க வேண்டும் என்று முடிவு செய்துள்ளது.

அதுபோலவே, காசர்கோடு தாலுகா முழுவதையும் கேரள மாநிலத்துடன் சேர்க்க வேண்டுமென்ற மாநிலக் குழுவினரின் சிபாரிசுக்கு மாருக, சந்திரகிரி நதிக்கு அப்பாலுள்ள காசர்கோடு தாலுகாவின் வட பகுதிகள் அனைத்தும் கர்நாடகத்துடன் இணைக்கப்பட வேண்டுமென்றும் சட்டசபை சிபாரிசு செய்திருக்கிறது.

கேரள, கர்நாடக மாநிலங்களை அவசியமான எல்லைத் திருத்தங்களுடன் அமைப்பதற்குப் போதுவான அங்கீகாரம் அளித்தும் சபையில் திருத்தப் பிரரேபணை நிறைவேற்றப்பட்டிருக்கிறது.

இவை தவிர, இலட்சத் தீவுகள், அமிந்திவித் தீவுகள், மினிக்காய் தீவுகள் ஆகியவைகள் அனைத்தும் மத்திய சர்க்காரின் நேரடி நிர்வாகத்திற்கு உட்பட்ட பகுதிகளாக இருக்க வேண்டுமென்றும் சிபாரிசு செய்யப்பட்டுள்ளது.

திருத்தப் பிரரேபணைகள்மீது வாக்கெடுப்பு நடைபெற்றபோது, ஒவ்வொரு உறுப்பினரும் தங்களுக்கு மட்டும் சாதகமாக இருந்த பிரரேபணைகளுக்குத்தான் வாக்களித்திருக்கின்றனர்; ஆனால், கர்நாடக, தமிழ் உறுப்பினர்கள் அனைவரும், தங்கள் இரு சாராரையும் பொறுத்த பிரரேபணைகள் மீது ஒருங்கு சேர்ந்து வாக்களித்திருக்கின்றனர்.

பொதுவாகக் கம்யூனிஸ்டு உறுப்பினர்கள் அனைவரும் இவ் வாக்கெடுப்புக்களின்போது நடுநிலைமை வகித்திருக்கின்றனர்.

மொத்தத்தில் நிறைவேற்றப்பட்ட மேற்கூறப்பட்டுள்ள 4 பிரரேபணைகளைத் தவிர, மற்றப் பிரரேபணைகள் அனைத்தும் திரும்பப் பெற்றுக்கொள்ளப்பட்டும், நிராகரிக்கப்பட்டும் இருக்கின்றன.

*விவாதத்திற்குப் பதிலளித்துப் பேசுகையில், நிதி அமைச்சர், பொதுவாக, மாநிலக் குழுவினரின் அறிக்கை குறித்து உறுப்பினர்கள் அனைவரும் தலைவர்கள் கொண்டுள்ள முடிவுகளுக்குக் கட்டுப்பட வேண்டும் என்று குறிப்பிட்டிருக்கிறார்.*

*தேவிகுளம், பீர்மேடு பகுதிகள் குறித்து, கேரள உறுப்பினர்களிடம் அவர் பேசுகையில் கூறியதாவது:—*

*"தமிழ்ப் பகுதிகளை—குறிப்பாக, தேவிகுளம், பீர்மேடு ஆகிய பகுதிகளை கேரள மாநிலம் தன்னுடனேயே இணைத்துக்கொள்ளச் செய்வது, கேரள மாநிலத்தால் முடிவு செய்யப்பட முடியாத ஒரு பெரிய சிறுபான்மைப் பிரச்சினை உருவாகுவதற்கு ஏதுவான ஒன்றாகும், ஆனால் அதே நேரத்தில், சென்னை மாநிலம் முன்பு ஒரு கூட்டு மாநிலமாக இருந்த காலத்தில் இதுபோன்ற சிறுபான்மைப் பிரச்சினையெல்லாம் வெகு சுலபமாகத் தீர்த்து வெற்றியும் கண்டிருக்கிறது.*

*"மொழிவாரி குறித்த சிறுபான்மைப் பிரச்சினைகளில் சென்னை சர்க்கார் நடந்துகொண்ட முறை, தேவிகுளம், பீர்மேடு, கூடலூர் ஆகிய பகுதிகளிலுள்ள மலையாள சிறுபான்மையினருக்கு எதிர்காலத்தில் உத்திரவாதம் அளிக்கும் வகையிலேயே அமைந்திருக்கிறது" என்று குறிப்பிட்டிருக்கிறார்.*

*சென்னை மாநிலத்திற்கு, 'தமிழ் நாடு' என்ற பெயரிட வேண்டுமென்று கேட்கப்பட்டபோது, நிதி அமைச்சர், "மாநிலங்களைச் சீர்திருத்தி அமைப்பது குறித்து பாராளுமன்றம் முடிவு செய்த பின்னர்தான் அது குறித்து ஆராய்வதற்கு ஏற்ற காலமாகும்," என்று குறிப்பிட்டிருக்கிறார்.*

*சட்டசபை எதிர்க்கட்சித் தலைவர் இராமமூர்த்தியின் கருத்துக்களை நிராகரித்துப் பேசுகையில் அமைச்சர் சுப்பிரமணியம், இப் பிரச்சினையில் கட்சிக் கண்ணோட்டத்துடனேயேதான் கவனம் செலுத்தியிருக்கிறார் என்றும், அழிவு நிலையிலிருந்து கொண்டிருக்கும் கம்யூனிஸ்டுக் கட்சியை மீண்டும் உருப் பெறச் செய்வதில் தான் ஆர்வம் செலுத்தி வருகிறார் என்றும், தேச நலனுக்குக் கேடு பயக்கும் வகையில்தான் அவரது கருத்துக்கள் இருக்கின்றன என்றும் குறிப்பிட்டிருக்கிறார்.*

★

# 'கோச்சி-சித்தூர், பாலக்காடு கிழக்குப்பகுதிகள் சென்னையுடன் இணைய வேண்டும்'

## மேல் (சட்ட) சபை சிபாரிசு

சென்னை, நவ. 24—

"உருவாக்கப்பட இருக்கிற புதிய சென்னை மாநிலத்தில், தற்போது கேரள மாநிலத்தில் உள்ள தேவிகுளம், பீர்மேடு தாலுகாக்களும், பாலக்கோடு தாலுகாவின் கிழக்குப் பகுதிகளும், கோவை மாவட்டத்திலுள்ள கொள்ளேகாலம் தாலுகாவைச் சேர்ந்த மலைப் பகுதிகளும் இணைக்கப்படவேண்டும்,"

என்று, குடியரசுத் தலைவரைக் கேட்டுக்கொள்ளும் பிரரேபணை ஒன்றை சென்னை மேல் சட்ட சபை ஏற்றுக்கொண்டிருக்கிறது.

கடந்த 4 நாட்களாக மாநிலக் குழுவினரின் அறிக்கைகள் பற்றி, மேல் சபையில் நடைபெற்ற விவாதங்களுக்குப் பின்னர், இன்று நடைபெற்ற இறுதிக் கூட்டத்தில், அமைச்சர் பக்தவத்சலம், 'மாநிலத்தின் நலனையும், சேர்மையையும் அடிப்படையாகக் கொண்டே மாநிலக் குழுவினரின் சிபாரிசுகள் கருதப்படவேண்டும்' என்று கேட்டுக்கொண்டிருக்கிறார்.

மாநிலக் குழுவினரின் சிபாரிசுகளைப் பொறுத்த பல்வேறு பிரச்சினைகளையும் மாநில சர்க்கார் இந்த அடிப்படைக் கண்ணோட்டத்துடனேயே நோக்கியிருக்கிறது என்றும் அவர் குறிப்பிட்டார்.

புனரமைப்புக் குறித்தப் பிரச்சினைகளில் சர்க்கார் கட்சி மனப்பாங்குடன் நடந்துகொள்கிறது என்று கூறப்பட்ட கருத்திற்கு மறுப்பு தெரிவித்து அவர் பேசுகையில், சர்க்கார் நேர்மையுடனும், நியாயமாகவும் பல்வேறு பிரச்சினைகளையும் அணுகியது என்றும், எது தங்களுக்குச் சரி என்று பட்டதோ, அதைச் செய்தது என்றும் குறிப்பிட்டிருக்கிறார்.

## அண்ணுதுரை, நெடுஞ்செழியன்

### புதுவை வருகை

27—11—55 மாலை 6 மணிக்கு புதுவை, ஒதியஞ்சாலைத் திடலில், புதுவை தி. மு. கழகச் சார்பில், தோழர் ச. சிவப்பிரகாசம் தலைமையில், தோழர் சி. என். அண்ணுதுரை, பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன் ஆகியோருக்கு வரவேற்பளிக்கப்படும்.

28—11—55 காலை 9 மணிக்கு புதுவை வட்டத்திலுள்ள தி. மு. கழகக் கிளைகளை, அண்ணு அவர்களும், பொதுச் செயலாளர் அவர்களும் பார்வையிடுவார்கள்.

## சிறப்புச் சொற்பொழிவு

27—11—55 ஞாயிறு மாலை 4-30 மணிக்கு பெங்களூர் மாவட்ட திராவிட முன்னேற்றக் கழகச் சார்பில் பெங்களூர் சர். கே. பி. புட்டண்ணு செட்டி நகர மண்டபத்தில், மாநில மாநாட்டு நிதிக்காக, தோழர் எஸ். வி. பதி தலைமையில் சிறப்புச் சொற்பொழிவுக் கூட்டம் நடைபெறும். தோழர்கள் சத்தியநாராயணு, முல்லை-சத்தி, மு. கருணுநிதி ஆகியோர் பேசுவர். நன்கொடை ரூ. 1—0—0, ரூ. 0—8—0.

## பொதுக்கூட்டங்கள்

27-11-55 மாலை 6 மணிக்கு, சென்னை-பெரம்பூர், பெரவள்ளூர் சுந்தரராஜ பெருமாள் கோவில் தெருவில், திரு. வி. க. மன்றச் சார்பில் தோழர் எஸ். பக்கிரிசாமி எம். எல். ஏ., தலைமையில் நடைபெறும். தோழர்கள் என். வி. நடராசன், கி. வ. ஞானசம்மந்தன் ஆகியோர் பேசுவர்.

ஃ ஃ ஃ

28—11—55 மாலை, அரியலூரில், தி. மா. மு. கழகச் சார்பில், தோழர் என். சி. கோவிந்தசாமி தலைமையில் நடைபெறும். தோழர் என். வி. நடராசன் பேசுவார்.

### இலங்கையில் மாவட்டக் கழகங்கள் அமைப்பு

"கண்டியில் நடைபெற்ற இலங்கை தி. மு. கழகப் பொதுக் குழு முடிவுப்படி, பொரளை, பெஸ்லையன் ரோடு 66/8 எண் இல்லத்தில், (பொரளை தி. மு. கழகப் பணி மனையில்) 27-11-55 மாலை 4-30 மணிக்கு மாவட்டக் கழக அமைப்பு ஆலோசனைக் கூட்டம் நடைபெறும். கொழும்பு நகர கிளைக் கழகங்கள் சார்பில் பிரதிநிதிகளை அனுப்பி வைக்கும்படி கேட்டுக்கொள்கிறேன்"

என்று கொள்ளுப்பிட்டி தி. மு. கழகச் செயலாளர் தோழர் இரா. ச. பொன்னம்பலம் தெரிவிக்கிறார்.

## கழகக் கூட்டங்கள்

குடியேற்றம் (வ. ஆ.)
ஆற்றில்
27—11—55 மாலை 5 மணிக்கு
தலைவர்: தி. ச. சுப்பிரமணியம்
பேசுபவர்:
தாமரைச்செல்வன்

★

கோவை
தர்மராஜா வீதியில்
27—11—55 ஞாயிறு மாலை
பேசுவோர்:
அருண்மொழி
சி. டி. தண்டபாணி
மு. இராமநாதன்

### சென்னை—16-வது வட்ட தி. மு. கழகச் செயற்குழு உறுப்பினர்கட்கு

27—11—55 காலை 10 மணிக்கு சென்னை 16-வது வட்ட தி. மு. கழகச் செயற்குழுக் கூட்டம், கழகப் பணிமனையில் நடைபெறும்.

## சி. பி. சிற்றரசு

சுற்றுப்பயணம்

26—11—55 திமிரி
27—11—55 பெங்களூர் சர். புட்டண்ணு டவுன் மண்டபத்தில், கர்நாடக மாநில தி. மு. கழகச் சார்பில், மாநில மாநாட்டு நிதிக்காக, மாலை 5 மணிக்கு சிறப்புச் சொற்பொழிவு
28—11—55 மைசூர்

### சென்னை தமிழாசிரியர் கழக பொது உறுப்பினர் கூட்டம்

27—11—55 பிற்பகல் 3 மணியளவில் சென்னை தமிழாசிரியர் கழக உறுப்பினர் பொதுக் கூட்டம் சென்னை பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளியில் நடைபெறும். சென்னையில் மாநாடு கூட்டுதல், தமிழாசிரியர் குறைகள், மற்றும் சில பிரச்சினைகள் குறித்து ஆய்ந்து முடிவு செய்யப்படும்.

### மாயூரம் வேலாயுதம் மன்ற உறுப்பினர்கட்கு

27—11—55 இரவு 8 மணியளவில், மன்றக் கட்டிடத்தில், மன்ற 5-வது ஆண்டிற்கான புதிய நிர்வாகக் குழுவினர் தேர்வு நடைபெறும் என்று அறிவிக்கப்படுகிறது.

### தமிழ் நாடு கிராமவாசிகள் சங்க முதல் ஆண்டு விழா

27—11—55 மாலை 2 மணிக்கு மேல், வாணியன் சத்திரத்தில், சக்கரமல்லூர் ஊராட்சி மன்றத் தலைவர் திரு. பார்த்தசாரதி தலைமையில் நடைபெறும். தோழர்கள் காஞ்சி-கல்யாணசுந்தரம், முசுவை ஆர். எஸ். பாண்டியன், கே. விநாயகம் எம்.எல்.ஏ., பஞ்சாட்சரம் எம்.எல்.ஏ., கே. ஜி. முனுசாமி எம்.எல்.ஏ., வி. பாலகிருஷ்ணன் எம்.எல்.ஏ., மற்றும் பலரும் சொற்பொழிவாற்றுவர்.

### திருமணங்கள்

27—11—55 காலை $7\frac{1}{2}$ மணிக்கு கோவை 29-வது வார்டு ஒக்கிலிகர் காலனியில் தோழர் உ. குணுளன்—தோழியர் லட்சுமி திருமணம் தோழர் எஸ். ஏ. ராசமாணிக்கம் தலைமையில் நடைபெறும். தோழியர் க. அருண்மொழி, தோழர்கள் சுந்தரராசன், மருதவாணன் ஆகியோர் வாழ்த்துரை வழங்குவர்.

* * *

27—11—55 காலை 9 மணிக்கு, சலகண்டபுரம் செட்டியார் தெரு, மணமகன் இல்லத்தில் தோழர் மு. பழனியப்பன்—தோழியர் மங்கையர்க்கரசி திருமணம் நடைபெறும்.

* * *

27—11—55 காலை 9 மணிக்கு, மாயூரம் கூறைநகர் எண். 57 வியாபாரி செட்டித் தெருவில், தோழர் எம். கணபதி—தோழியர் கோ. ருக்மணி திருமணம் தோழர் சி. சக்கையன் தலைமையில் நடைபெறும். தோழர்கள் என். எஸ். இளங்கோ, என். இட்டப்பா, ஆர். கணேசன் ஆகியோர் வாழ்த்துரை வழங்குவர்.

## செங்கற்பட்டு மாவட்ட

தி.மு. கழக உறுப்பினர்கட்கு

★

"27-11-55 காலை 9 மணிக்கு, காஞ்சீபுரம், 'திராவிட நாடு' அலுவலகத்தில், செங்கற்பட்டு மாவட்ட தி. மு. கழக உறுப்பினர் கூட்டம் நடைபெறும். அதுபோது, மாநில மாநாட்டு நிதி, போதுக் குழுவுக்கு ஒரு உறுப்பினர் தேர்ந்தெடுத்தல் ஆகியவை ஆய்வுக்கு வரும்," என்று, செங்கற்பட்டு மாவட்ட தி. மு. கழகச் செயலாளர் தோழர் கே. டி. எஸ். மணி அறிவிக்கிறார்.

## கே. கே. நீலமேகம்

தோழர் கே. கே. நீலமேகம் அவர்கள், சென்னை சர்க்கார் பொது மருத்துவ மனையில், வார்டு எண் 30, எண் 6. படுக்கையில் அனுமதிக்கப்பட்டு, சிகிச்சை பெற்றுவருகிறார்.

### நகர இளைஞர் கழகம்

26—11—55 மாலை 6 மணிக்கு, சென்னை சூளை மேற்படி கழகத்தில் தோழர் இராமச்சந்திரன் 'ஹோமியோபதி என்றாலென்ன?' என்பது பற்றி சொற்பொழிவாற்றுவார்.

27—11—55 காலை 10 மணிக்கு சுகாதார ஊர்வலம் திரு. டபிள்யூ. ஆனந்தரங்கம் அவர்கள் தலைமையில் சூளை குமாரசாமிராஜபுரத்திற்குச் சென்று சுகாதாரப் பணியாற்றும். அங்குள்ளோருக்கு பால் வழங்கப்படும்.

### திருக்குறள் வகுப்பு

27—11—55 மாலை 4 மணிக்கு ஆம்பூர் இந்து உயர்நிலைப் பள்ளியில் திருவள்ளுவர் கழகத்தின் சார்பாக நடத்தப்படும் திருக்குறள் வகுப்பில் தோழர் லா. சி. சுப்பிரமணியம் அவர்கள் 'வான் சிறப்பு' என்னும் அதிகாரத்தை நடத்துவார்.

### சொற் பயிற்சிக் கூட்டம்

26—11—55 மாலை $6\frac{1}{2}$ மணிக்கு வடசென்னை குறள்நெறிக் கழகத்தில் (எண். 59 மன்னார்சாமி கோயில் தெரு, இராயபுரம்) தோழர் சந்திரசேகர் தலைமையில், 'நமது இலக்கியம்' என்ற தலைப்பில் பல தோழர்கள் பேசுவர்.

### தொழிலாளர் வாழ்க்கைத் தரப் புள்ளிவிவரம்

சென்னை, நவ. 24—

சென்னை நகர தொழிலாளர் வாழ்க்கைத்தர புள்ளி, 1955 நவம்பர் 5-ந் தேதியுடன் முடிவான வாரத்தில் 326 ஆக இருந்தது. இது முந்திய புள்ளியைவிட இரண்டு புள்ளிகள் அதிகம். காய்கறி, தேங்காய் எண்ணெய், நல்லெண்ணெய், இவற்றின் விலை ஏற்றமே இதற்குக் காரணமாகும்.

## ரூ.3 கோடி செலவில்...

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

கோடி செலவில் ஏற்படுத்தப்படும் என்று தெரியவருகிறது.

இது தனிப்பட்ட ஒரு கம்பெனியிடம் ஒப்படைக்கப்படும்; கம்பெனியின் மூலதனத்தில் சர்க்காருக்கும் ஒரு பங்கு உண்டு என்றும், கம்பெனியின் டைரக்டர் குழுவில் அரசாங்கத்தால் நியமிக்கப்பட்ட ஒருவர் அங்கம் வகிப்பார் என்றும், துணி, காகிதம், சோப்பு, கண்ணாடி மற்றும் பல பொருட்கள் உற்பத்திக்கு இந்த சோடா உப்பு பெரிதும் தேவை என்றும் கூறப்படுகிறது.

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம்.ஏ. அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று, (24 சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம் சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன் எம்.ஏ.

